பிள்ளை தெரு இவைகளில் லாரிகள் நின்று போக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தும் கூட, அங்கு லாரிகள் போகாது தெருவை அடைத்துக்கொண்டிருக்கிறது. அது தடுக்கப் படுமா ?

MR. SPEAKER : தனி கேள்வி போடுங்கள்.

*Kilaithangiar Scheme in Tiruthuraipoondi taluk*

* 627 *Q.*—SRI A. VEDARATHNAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Kilaithangiar scheme in Tiruthuraipoondi taluk, Tanjore district, has been commenced; and

(*b*) if so, when it will be completed?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) Construction of an outlet at 8/7 in the right bank of Marakkakorayar with six rows of pipes fitted with screw gearing arrangements and extension of the barred of the Idaiyur drainage sluice at 3/7 in the right bank of Kilaithangiar have already been completed in July 1957. Conversion of the existing tail dam at mile 4/2 of Theekananguruviyar into a regulator is in progress and this item of work is likely to be completed by April 1959.

SRI A. VEDARATHNAM : இந்தத் திட்டத்திற்காக அரசாங்கம் எவ்வளவு தொகை சாங்க்ஷன் செய்திருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்கு சாங்க்ஷன் செய்யப்பட்ட தொகை சொற்பந்தான். 18,500 ரூபாய்தான்.

*Bus permits*

10 a.m. * 628 *Q.*—SRI T. SAMPATH : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether the High Court made any observations in a recent judgment regarding the marking system followed by the Regional Transport Authority in granting bus permits; and

(*b*) whether the Government have any intention to modify the system of awarding marks?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) Yes, Sir.

(*b*) The instructions relating to the grant of permits for stage carriages have been modified. A copy [a] of it is laid on the table of the House.

SRI T. SAMPATH : Sir, is the Hon. Minister aware of the fact that even in the amended Government Order there are conditions like workshop facilities, maintenance facilities, and award of marks for sector qualification. These conditions are not conducive to encourage new entrants. Will these conditions be relaxed in the case of new entrants?

THE HON. SRI V. RAMAIAH : In the Government Order we have specifically stated that new entrants should be encouraged for certain routes. It is with this view we have examined the various difficulties that will arise. We feel that new entrants will take these routes.

---

[a] Printed as Appendix I on pages 1012–1013 infra.

MR. SPEAKER : It is now 10 o'clock. There are three more questions. We can take five more minutes and dispose them of.

SRI A. GOVINDASAMY : ஸார், ரீஜனல் ட்ரான்ஸ்போர்ட் அதிகாரியால் தென்னாற்காடு ஜில்லாவில் பல பஸ் பெர்மிட்டுகள் ரத்துசெய்யப்பட்டிருக்கின்றன. அவ்விதம் ரத்துச்செய்யப்பட்டிருக்கும் பஸ் பெர்மிட்டுகள் எத்தனை என்பதை தெரிவிக்க முடியுமா ?

THE HON. SRI V. RAMAIAH : இதற்கு தனிக்கேள்வி வேண்டும்.

SRI K. R. NALLASIVAM : ஸார், சிறு சிறு பஸ் சர்வீஸ் நடத்தக்கூடிய முதலாளிகள் எல்லோரும் சேர்ந்து ஒரு தொழிற்சாலையை ஆரம்பித்தால் அதற்கு பெர்மிட்டு கொடுப்பதற்கு அரசாங்கம் யோசனை செய்யுமா ?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் அவர்கள் சிறிய பஸ் முதலாளிகளுக்கு கூடுதலாக வசதி செய்து கொடுக்க முடியுமா என்ற முறையில் கேட்கிறார்கள் என்று நினைக்கிறேன். அதற்கு தகுந்த முறையில்தான் இந்த ஜி.ஒ. அமைக்கப்பட்டிருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : ஸார், இந்த புதிய ஜி.ஒ.-வில் 75 மைலுக்கு அப்பால் இருக்கக்கூடிய ரூட்டுகளுக்கு பெரிய ப்ளீட் ஓனர்களுக்குத்தான் பெர்மிட் கொடுக்க முடியும் என்றிருக்கிறது. இதற்கு காரணம் என்ன ?

THE HON. SRI V. RAMAIAH : பெரிய பஸ் முதலாளிகளுக்குத்தான் கொடுக்கவேண்டும் என்ற எண்ணம் அரசாங்கத்திற்கு கிடையாது. யார் யார் திறமையாக நடத்துகிறார்களோ அவர்களுக்கு கொடுக்கப்பட வேண்டும் என்று தான் அரசாங்கம் கருதியிருக்கிறது.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஸார், புதியதாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் ஜி.ஒ.-வில் 15 மைல்களுக்கு உட்பட்டு இருக்கின்ற ரூட்டுகளுக்குதான் புதிதாக விண்ணப்பித்தவர்களுக்கு கொடுக்கப்படும் என்றிருக்கிறது. அதை நீக்கிவிட்டு எந்த ரூட்டிலும் பஸ் சர்வீஸ் நடத்துவதற்கு விண்ணப்பித்துக் கொள்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI V. RAMAIAH : இப்போதிருக்கக்கூடிய ஜி.ஒ.வில் யார் எல்லாம் விண்ணப்பித்துக்கொள்ளலாம் என்பது அல்ல. இவ்விதம் விண்ணப்பித்துக்கொள்வதில் சில நிபந்தனைகள், விதிகள் இருக்கின்றன. அவைகளை யார் பூர்த்தி செய்கிறார்களோ அவர்களுக்கு கொடுப்பதற்கு அரசாங்கம் பரிசீலனை செய்யும்.

SRI T. KARIA GOUNDER : தலைவர் அவர்களே, கூட்டுறவு முறையில் பஸ்களை நடத்துவதற்கு முன்வருவார்களேயானால் அவர்களுக்கு உதவி செய்ய சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI V. RAMAIAH : இதில் அதிகமான கவனம் செலுத்தப்பட்டுதான் வருகிறது,

*Revenue of the State Transport Department*

* 629 *Q.*—SRI T. S. RAMASWAMI PILLAI : Will the Hon. the Minister for Electricity be pleased to state the earnings per mile, cost per mile and the yearly net profit in the Transport Department for the last three years?